تاميلي

# ஹிஜாப் ஒரு வணக்கம்

மூலம்
அறிவியல் பிரிவு தாருல் வதன்

தமிழில்
ஏ. பீ. அப்துர் ரஹீம் (மதனி)

# الحجاب عبادة

ترجمة : عبد الرحيم أدم فلي



المكتب التعاوني للدعوة والإرشاد
وتوعية الجاليات بغرب الديرة

# ஹிஜாப் ஒரு வணக்கம்

மூலம்
அறிவியல் பிரிவு தாருல் வதன்

தமிழில்
ஏ பி அப்துர் ரஹீம் (மதனி)

# الحجاب عبادة

**(اللغة التاميلية)**

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بغرب الديرة
ص .ب . ١٥٤٤٨٨ الرياض: ١١٧٣٦ هاتف:٤٣٩١٩٤٢

ح مكتب توعية الجاليات بغرب الديرة ، ١٤٢٤هـ

فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر
القسم العلمي بدار الوطن
الحجـــاب عبادة / القسم العلمي بدار الوطن - تاميلي/ محمد رحيم آدم فلي - الرياض ١٤٢٤هـ
٢٠ ص ؛ ١٢×١٧ سم
ردمك ٢-٨-٩٣٩٧-٩٩٦٠
١ - الحجـــاب والسفور أ- فلي ، محمد رحيم آدم (مترجم)
ب- العنوان
ديوي ١، ٢١٩ ١٥٤٥/١٤٢٤

رقم الإيداع ١٥٤٥/ ١٤٢٤هـ
ردمك ٢-٨-٩٣٩٧-٩٩٦٠

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால் (எழுதுகிறேன்)
புகழ் அனைத்தும் ஏகன் அல்லாஹ்வுக்கே! ஸலவாத்தும் ஸலாமும் இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது உண்டாவதாக.

முஸ்லிம் சகோதரியே!

❖ தொழில் நுட்பம், அறிவியல் முன்னேற்றத்தின் வெளிப்பாடாகவுள்ள சிந்தனை மோதல், உலகமயமாக்கல், தொடர்புத்துறைகள், விண் வெளித்துறைகள் முன்னேற்றமடைந்துள்ள இந்த நவீன யுகத்தில் ஹிஜாப் அணிவது பிற்போக்கானது, நாம் காண்கின்ற இந்த எழுச்சிக்கு பொருத்தமற்றது என அடிக்கடி சில எழுத்தாளர்கள் குறைகளை உன் ஹிஜாப் மீது அள்ளிக் கொட்டுகின்றனர்.

❖ மேற்கத்திய நாகரீகத்தால் கவரப்பட்ட அவர்கள் பல பிரிவினர்களாக உள்ளனர்.

சிலர் ஹிஜாப் அணிவது ஒரு கடமை என்பதை முற்று முழுதாக மறுத்து அது இஸ்லாத்தின் ஆரம்ப கால சமூகங்களுக்குரிய தனியான ஆடை எனக் கருதுகின்றனர்.

இன்னும் சிலர் முகத்தை மறைப்பதை மறுத்து பெண் தனது அலங்காரத்தை வெளிப்படுத்தி, ஆண் பெண் கலப்பிற்கு அழைப்பு விடுக்கின்றனர். அத்தோடு குர்ஆனிலோ, ஸுன்னாவிலோ முகத்தை மறைக்குமாறு கூறப்படவில்லை. மாற்றமாக அது மார்க்கத்தில் கடும் போக்காளர்களால் நடைமுறைப்படுத்தப்பட்டு பின்னர் அவர்களிடமிருந்து பெற்ற வழக்காறுகளில் உள்ளதெனக் கருதுகின்றனர்!

இன்னும் சிலர் அதில் வழி பிறழ்ந்து பெண் நவீன காலத்துக்கு முகம் கொடுப்பதற்காக தனது ஆற்றல்களை வெளிப்படுத்தி நவீன நாகரீகத்தை நோக்கி ஆணோடு ஒன்றாக பெண்ணும் முன்னேற்றப் பாதையில் செல்வதற்கு ஹிஜாப் என்ற சிறையிலிருந்து அவள் விடுவிக்கப்பட வேண்டும் எனக் கூறுகின்றனர்.

ஹிஜாப் அணிந்து, அலங்காரங்களை வெளிப்படுத்துவதை விட்டு விடுமாறு அழைப்பு விடுப்பவர்கள் பெண்ணை உடல் ரீதியாக மாத்திரம் நோக்குகின்றனர். பெண் தான் விரும்பியதை அணிவதற்கு அவளை விட்டு விட்டால் இந்தக் குறுகிய உடல் ரீதியான கண்ணோட்டத்திலிருந்து சமூகம் விடுபடும் என்று நம்புகின்றனர்.
அவர்கள் அனைவரும் விரும்பியோ விரும்பாமலோ அறியாமையிலும், வழிகேட்டின் பக்கம் அழைப்பதிலும் கூட்டாகி விட்டனர்.

❖ அவர்கள் குறித்த யதார்த நிலை யாரும் அறியாதது அல்ல.

❖ அவர்களின் வாதமோ முற்றிலும் பிழையானது. அதன் ஆரம்பம் இறுதியையும், இறுதி ஆரம்பத்தையும் பொய்ப்பிக்கிறது.

❖ அவர்களின் தவறான அழைப்பு முஸ்லிம் பெண், முஸ்லிம் குடும்பம், முழு முஸ்லிம் சமுதாயத்தின் மீதும் செய்யப்பட்டிருக்கின்ற பகிரங்கமான சூழ்ச்சியாகும்.

❖ அப்படியிருந்தும் எமது மாதர்களின் உள்ளங்களில் ஆதிக்கம் செலுத்துவதில் அவர்கள் வெற்றியடைந்து விட்டனர். அழிவையும், நாஷத்தையும் உள்ளே சுமந்திருக்கும் அவர்களின் கவர்ச்சியான வாசகங்களாலும், இனிமையான வார்த்தைகளாலும் அம்மாதர்களை ஏமாற்றி விட்டனர். எனவே அவர்கள்தான் பெண்களின் உரிமைக்காக குரல் கொடுப்பவர்கள் என நினைக்கின்றனர். இஸ்லாம் மாதர்களுக்கு பூரண பாதுகாப்பைக் கொடுத்து அவர்களின் அந்தஸ்தை வாழ்க்கையின் எல்லாக் கட்டங்களிலும் உயர்த்தி விட்டிருப்பதை அவர்கள் அறியவில்லை.

❖ எனவே அவர்களின் போலியான கூற்றுகளையும், வாதங்களின் உள்ரங்கத்தையும் தெளிவுபடுத்தி அவர்களின் வார்த்தைகளை பலவீனப்படுத்தி அவர்களின் சந்தேகங்களுக்கு பதில் கொடுப்பது அவசியமாகும். இதனால் அசத்தியத்திலிருந்து விடுபட்டு சத்தியத்தின் பால் திரும்புவார்கள் என்பது எமது நம்பிக்கை.

## ஹிஜாப் ஒரு வணக்கம்

ஹிஜாப் முக்கிய வணக்கங்களில் ஒன்றாகவும், கடமைகளில் முக்கிய கடமையாகவும் இருக்கின்றது. ஏனெனில் அல்லாஹ் ஹிஜாப் அணியுமாறு அல்குர்ஆனில் கட்டளையிட்டிருக்கிறான். அலங்காரங்களை வெளிப்படுத்துவதை தடை செய்திருக்கிறான். நபி (ஸல்) அவர்களும் ஸுன்னாவில் ஹிஜாப் அணியுமாறு பணித்து, அலங்காரங்களை வெளிப்படுத்துவதை தடை செய்துள்ளார்கள். இஸ்லாமிய அறிஞர்கள் சென்ற காலங்களிலும், தற்காலத்திலும் ஹிஜாப் அணிவது வாஜிப் என்பதில் ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளனர். அவர்களில் ஒருவருக்கும் இதில் மாற்றுக் கருத்தில்லை. ஹிஜாப் அணிகின்ற இவ்வணக்கத்தை குறிப்பிட்ட காலத்துக்குரியது எனக் கூறுவதற்கு தக்க ஆதாரம் அவசியமாகிறது.அவ்வாறு கூறுவோருக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. எனவே அடித்துக் கூறுகின்றோம் "ஹிஜாப் அணிவது என்பது புதுமையானது அல்ல.

❖ ஒரு வாதத்திற்கு, குர்ஆனிலோ நபி மொழிகளிலோ ஹிஜாப் அணிவது குறித்து எந்த வித ஏவல்களும் இல்லாதிருந்தும், அதன் சிறப்புக் குறித்து எந்தவொரு ஆதாரமும் பெறப்படாமலிருந்தாலும் கூட ஒரு பெண் அதை கடைபிடிப்பதில் அக்கரையோடு செயல்பட்டு வருவாளேயானால் அது அவளின் சிறப்புக்கும், மகிமைக்கும் காரணமாய் இருப்பதோடு பிறரின் பாராட்டுக்கும் உரியவளாய் ஆகிவிடுவாள் எனும் போது குர்ஆன், ஸுன்னா ஆகிய அடிப்படை மூலாதாரங்களும், இஜ்மா:. எனும் இஸ்லாமிய அறிஞர்களின் ஏகோபித்த முடிவும் ஹிஜாப் அணிவது கடமை என வலியுறுத்தி நிற்பது அதன் அவசியத்தை வலியுறுத்தப் போதுமானதாகும்.

## ஹிஜாப் கடமை என்பதற்கான குர்ஆன், ஸுன்னா ஆதாரங்கள்

ஹிஜாப் கடமை என்பதற்கான தெளிவான சான்றும், அது இஸ்லாத்தின் ஆரம்ப கால சமூகங்களுக்குரியது, அவர்களிடமிருந்து பெறப்பட்ட வழக்காறு

எனக் கருதுவோருக்கு தக்க பதிலும் கீழ் வரும் ஆதாரங்களில் காணப்படுகிறது.

## குர்ஆனிலிருந்து சில ஆதாரங்கள்

1 – அல்லாஹ் கூறுகின்றான்: "மேலும் (நபியே!) விசுவாசிக ளான பெண்களுக்கு கூறுவீராக :"தங்கள் பார்வைகளை அவர்கள் தாழ்த்திக் கொள்ளவும், தங்கள் மர்மஸ்தானங் களையும் பேணிப் பாதுகாத்துக் கொள்ளவும், அதினின்று வெளியில் தெரியக்கூடியவைகளைத் தவிர, தங்கள் (அலங் காரத்தை) அவர்கள் வெளிப்படுத்த வேண்டாம், தங்கள் முந்தானைகளை தம் மேல் சட்டையின் மீது போட்டு (தலை, கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறைத்துக் கொள்ள வேண்டும், மேலும் அவர்கள் தம் அலங்காரத் தை தம் கணவர்கள், அல்லது தம் தந்தையர், அல்லது தம் கணவர்களின் தந்தையர, அல்லது தம் குமாரர்கள் அல்லது தம் கணவர்களின் குமாரர்கள், அல்லது தங்கள் சகோதரர்கள், அல்லது தம் சகோதரர்களின் குமாரர்கள், அல்லது தம் சகோதரிகளின் குமாரர்கள், அல்லது தங்க ளுடைய பெண்கள், அல்லது தங்களுடைய வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்டவர்கள், அல்லது (ஆண்களில் பெண்களின் மீது) விருப்பமற்ற பணியாளர்கள், அல்லது பெண்களின் மறைவான அவயங்களை அறிந்து கொள ளாத சிறு பிராயத்தையுடைய சிறார்கள் ஆகியவர்களைத் தவிர, (மற்றெவருக்கும்) வெளிப்படுத்த வேண்டாம். அன் றியும் தம் அலங்காரத்திலிருந்து தாம் மறைத்திருப்பதை அறியப்படுவதற்காக, தங்களுடைய கால்களை (பூமியில்) அடிக்க வேண்டாம், விசுவாசிகளே! நீங்கள் வெற்றி பெறு வதற்காக அல்லாஹ்வின் பக்கம் (பாவமன்னிப்பைக் கோரி) தவ்பாச் செய்யுங்கள்." (24: 31)

ஆஇஷா (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்: அல்லாஹ் முஹாஜிரீன் பெண்களுக்கு அருள்பாலிப்பானாக! "தங்கள் முந்தானைகளை தம் மேல் சட்டைகளின் மீது போட்டு (தலை, கழுத்து, நெஞ்சு, ஆகியவற்றை மறைத்துக் கொள்ள வேண்டும்) " என்ற திருக்குர்ஆன் வசனம் இறங்கியதும் அவர்கள் தமது ஆடைகளைக் கிழித்து ஹிஜாபாக அணிந்து கொண்டனர்." (புகாரி)

2 – அல்லாஹ் கூறுகின்றான்: "பெண்களில் திருமண விருப்பமற்ற (மாத விலக்கு நின்று குழந்தைகள் பெறும் நிலையைத் தாண்டி விட்ட,) முதியவர்கள், தங்கள் அழகை வெளிப்படுத்தாதவர்களாக, தங்கள் மேல் ஆடைகளைக் களைந்து விட்டிருப்பதில் அவர்கள் மீது குற்றமில்லை. (இதனையும் தவிர்த்து) அவர்கள் பேணிக்கொள்வது அவர்களுக்கு மிக்க நன்று. அல்லாஹ்வோ (யாவற்றையும்) கேட்கிறவன், நன்கறிந்தவன்." **(24:60)**

3 – "நபியே! உம்முடைய மனைவியருக்கும், உம்முடைய புதல்விகளுக்கும், விசுவாசிகளின் பெண்களுக்கும், அவர்கள் தங்கள் தலை முந்தானைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறு நீர் கூறுவீராக! அதனால் அவர்கள் (சுதந்திரமானவர்கள் என) அறியப்படுவதற்கு இது மிக நெருக்கமானதாகும், அப்போது அவர்கள் (பிறரால்) நோவினை செய்யப்படமாட்டார்கள், இன்னும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாக, மிக்க கிருபையுடையவனாக இ ருக்கிறான்." (33:59)

4 – "இன்னும், (நபியுடைய மனைவியரே!) நீங்கள் உங்கள் வீடுகளிலேயே தங்கியிருங்கள். முந்தைய அறியாமைக் காலத்தில் (பெண்கள் மறைக்க வேண்டியதை மறைக்காது) வெளிப்படுத்தியதைப் போன்று வெளிப்படுத்தித் திரியாதீர்கள்." (33:33)

5 – "மேலும் (நபியுடைய மனைவியராகிய) அவர்களிடம் யாதொரு பொருளை நீங்கள் கேட்(க நேரிட்)டால், நீங்கள் திரைக்கு அப்பால் இருந்து கொண்டே அவர்களிடம் கேளுங்கள். அ(வ்வாறு செய்வ)து உங்கள் உள்ளங்களுக்கும், அவர்கள் உள்ளங்களுக்கும் மிகப் பரிசுத்தமானதாகும்."(33:53)

## ஸுன்னாவிலிருந்து சில ஆதாரங்கள்

1 – உமர் (றழி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து அல்லாஹ்வின் தூதரே உங்கள் மனைவியருக்கு திரையிடுவீராக! என்று கூறினார்கள். ஆஇஷா (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்: உடனே அல்லாஹ் ஹிஜாப் வசனத்தை அல்குர்ஆனில் இறக்கியருளினான். (புகாரி, முஸ்லிம்)
வேறொரு அறிவிப்பில்: உமர் (றழி) அவர்கள் நபியவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே முஃமின்களின் தாய்மார்களுக்

கு ஹிஜாப் அணியுமாறு பணித்தால் என்ன என்று கேட்ட போது அல்லாஹ் ஹிஜாப் வசனத்தை இறக்கியருளி னான். (புகாரி, முஸ்லிம்)

2 – நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு மஸ்ஊத் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: "பெண் முழுமையாக மறைக்கப்பட வேண்டியவள்" (திர்மிதி) ஷைக் அல்பானி யும் இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.

3 – நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: "பெருமைக்காக தனது ஆடையை இழுத்து செல்பவனை அல்லாஹ் மறுமையில் பார்க்கமாட்டான்" என நபியவர்கள் கூறிய போது உம்மு ஸலமா (றழி) அவர்கள் பெண்கள் தமது ஆடைகளில் தொங்கிக் கொண்டிருப்பதை என்ன செய்வது எனக் கேட்க அவர்கள் ஒரு சான் அளவு அதனைத் தொங்க விட்டும் என்று கூறினார்கள்.அப்படியாயின் அவர்களின் பாதங்கள் வெளிப்படும் என உம்மு ஸலமா (றழி) அவர்கள் கூற ஒரு முழமளவு அதனை தொங்க விட்டும் அதனை விட அதிகரிக்க வேண்டாம் என நபியவர்கள் கூறினார் கள்." (அபூதாவூத், திர்மிதி)

## பெண்கள் தமது முகத்தை மறைக்க வேண்டும் என்பதற்கான குர்ஆன், ஸுன்னா ஆதாரங்கள்.

1 – அல்லாஹ் கூறுகின்றான்: "தங்கள் முந்தானைகளை தம் மேல் சட்டைகளின் மீது போட்டு (தலை, கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறைத்து)க் கொள்ள வேண்டும்." (24:31)

◆ அஷ்ஷெய்க் இப்னு உஸைமீன் அவர்கள் கூறுகின்றார் கள்: கிமார் (முந்தானை) என்பது பெண் தனது தலை யை மறைக்கக் கூடியது. மேல் சட்டையின் மீது முந்தா னையைப் போட்டு மறைக்குமாறு பணிக்கப்பட்டுள்ள தால் முகத்தை மறைத்துக் கொள்ளுமாறும் வேண்டப் பட்டிருக்கிறாள்.

2 – அல்லாஹ் கூறுகின்றான்: "நபியே! உம்முடைய மனை வியருக்கும், உம்முடைய புதல்விகளுக்கும், விசுவாசிக

ளின் பெண்களுக்கும், அவர்கள் தங்கள் தலை முந்தானை களைத் தாழ்த்திக் கொள்ளுமாறு நீர் கூறுவீராக." (33:9)

- இப்னு அப்பாஸ் (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்: விசு வாசிகளின் பெண்கள் ஏதும் தேவைக்கு வெளியே சென் றால் தமது தலை முந்தானைகளை தாழ்த்தி தமது முகங்களை மறைக்குமாறு அல்லாஹ் கட்டளையிடுகி றான்.

அஷ்ஷெய்க் இப்னு உஸைமீன் அவர்கள் கூறுகின்றார்கள்: ஸஹாபியின் விளக்கம் ஆதாரத்துக்குரியதாகும். இன்னும் சில அறிஞர்கள் ஸஹாபியின் விளக்கம் நபி (ஸல்) அவர்க ளின் வார்த்தையின் தரத்தில் உள்ளதெனக் கூறுகின்றனர்.

3 – நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: "இஹ்ராம் அணிந்த பெண் முகத்திரையோ, கை மேஸோ அணிய வேண்டாம்." (புகாரி)

- காழி அபூபக்ர் இப்னுல் அறபி அவர்கள் கூறுகின்றார் கள்: "இஹ்ராம் அணிந்த பெண் முகத்தை மறைக்க வேண்டாம்" என்ற இப்னு உமர் (றழி) அவர்களின் ஹதீ ஸில் ஹஜ் அல்லாத நேரங்களில் பெண் தனது முகத் தை மறைப்பது கடமை என்பது விளங்க முடிகிறது. ஆனால் ஹஜ்ஜில் முகத்தில் சேராதவாறு முகத்திரையை தொங்க விட்டுக் கொள்ள வேண்டும். பெண்கள் ஆண் களை விட்டும், ஆண்கள் பெண்களை விட்டும் ஒதுங்கியி ருக்க வேண்டும்.

- ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா அவர்கள் கூறு கின்றார்கள் : முகத்திரையும், கை மேஸும் இஹ்ராம் அணியாத பெண்களிடம் அறிமுகமாயிருந்தது என்பதை இந்த ஹதீஸ் கூறுகிறது. இதன் பிரகாரம் அவர்கள் தமது முகத்தையும், கைகளையும் மறைப்பதை அவசியப்படுத் துகிறது.

4 – "பெண் முழுமையாக (அவ்ரத்) மறைக்கப்பட வேண்டி யவள்" என்ற நபி (ஸல்) அவர்களின் பொன் மொழி முகத் தை மறைப்பது மார்க்கமாக்கப்பட்டுள்ளது என்பதற்கு ஆதாரமாகும்.

அஷ்ஷெய்க் ஹமூத் அத் துவைஜிரீ அவர்கள் கூறுகின்றார் கள்: பெண்ணின் அனைத்து அங்கங்களும் அண்ணிய ஆண்களுக்கு அவ்ரத்தாகும் என்பதை இந்த ஹதீஸ் அறி விக்கிறது. இதில் அவளின் முகமாயினும், ஏனைய உறுப்பு களாயினும் சரியே!.

## அறியாமையோ, பிடிவாதமோ?!

முஸ்லிம் மாதுவின் ஹிஜாப் நவீன காலத்துக்குப் பொருத்தமற்றதெனக் கருதுவோரே!!

பெண் முகத்தை மறைப்பது உஸ்மானிய கிலாபத்தின் வழக்காறுகளில் உள்ளதென வாதிடுவோரே!!

பெண்ணை அவளது வீட்டை விட்டும் வெளியேற்றி எல்லா இடங்களிலும் ஆண்களோடு கலந்து விட விரும்பு வோரே.

அல்லாஹ்வின் வேத வசனங்களும், நபிகளாரின் பொன் மொழிகளும் உங்கள் முன் வந்து கிடக்கின்றன. அவற்றைப் படியுங்கள். ஹிஜாப் அணிவதும், முகத்தை மறைப்பதும் அவசியம் என்பதை வலியுறுத்துகின்ற இமாம் களின் விளக்கம் இதோ இருக்கிறது. அவைகளைப் புரிந் து கொள்ளுங்கள். இந்த அல்குர்ஆன் வசனங்களையும், பொன் மொழிகளையும் முன்பு நீங்கள் அறிந்திராவிட்டால் இப்போது உங்கள் முன்னால் வைக்கிறோம். அசத்தியத் தில் நிலைத்திராமல் சத்தியத்தின் பக்கம் நீங்கள் திரும்பு வீர்கள் என எதிர் பார்க்கிறோம். ஏனெனில் சத்தியத்தின் பக்கம் திரும்புவது மேன்மையும், அசத்தியத்தில் நிலைத் திருப்பது இழிவும், கெடுதியுமாகும்.

- ஆனால் அல்லாஹ் கூறுகின்ற "அவர்களுடைய இதயங்கள் அதனை (உண்மையென) உறுதி கொண்ட நிலையில் அநியாயமாகவும், அகம்பாவததாலும் அத னை அவர்கள் மறுத்தார்கள் " (27:14) என்ற கூட்டத்தா ரில் நீங்கள் இருந்தால் உங்களுக்கு நூற்றுக்கணக்கான அல்குர்ஆன் வசனங்களையும், பொன் மொழிகளையும் முன் வைத்தாலும் நீங்கள் சத்தியத்துக்கு கட்டுப்பட வோ உண்மையின் பக்கம் திரும்பவோ மாட்டீர்கள். ஏனெனில் நீங்கள் மிகத் தெளிவாகவே இஸ்லாம் வாழ்க் கையின் வழி காட்டியாகவோ குர்ஆன் எக்காலத்துக்கும், எல்லா இடத்துக்கும் பொருத்தமானது என்பதையோ

நம்புவதில்லை. அல்லாஹ் கூறுகின்றான்: "அறியாமைக் காலத்துத் தீர்ப்பையா அவர்கள் தேடுகின்றனர்? உறுதியாக நம்பிக்கை கொண்ட சமூகத்தாருக்குத் தீர்ப்பளிப்பதில் அல்லாஹ்வை விடவும் மிக்க அழகானவன் யார்?" (5:50)

## ஹிஜாபும் நாகரீகமும்

ஹிஜாப் அணிவது பிற்போக்கின் வெளிப்பாடு என்றும் அது பெண்ணின் முன்னேற்றத்திற்கும், எழுச்சிக்கும் தடையாகவுள்ளது என்றும் நாகரீகத்தின் அழைப்பாளர்கள் கருதுகின்றனர். முன்னேற்றமடைந்த நாடுகள் கண்ட எழுச்சியையும், நாகரீகத்தையும் வளர்முக நாடுகள் அடைவதற்காக மேற்கொள்ளும் நிர்மாணப் பணியிலும், நவ நாகரீகத்தோடு சேர்ந்து செல்வதற்கும் ஹிஜாப் பெண்ணுக்கு பெரும் தடையாக இருப்பதாக அவர்கள் கருதுகின்றனர்.

நாம் அவர்களிடம் கேட்கிறோம்: தொழில் நுட்பம், நாகரீக முன்னேற்றத்திற்கும் ஹிஜாபிற்கும் என்ன தொடர்பிருக்கிறது?!

பெண் தனது ஆடைகளைக் களைந்து விட்டு ஆண்களுக்கு முன்னால் நிர்வானமாகவேண்டும் என்பது நாகரீகத்தின் நிபந்தனையா?!

ஆண் தனது மிருகத்தனமான இன்பத்தை அனுபவிப்பதற்காக அவனோடு பெண் இரண்டறக் கலக்க வேண்டும் என்பது நாகரீகத்தின் நிபந்தனையா?!

பெண் என்பவள் ஆண்மாவோ, நாணமோ, இதயமோ அற்ற வெறும் ஜடமாக இருக்க வேண்டுமென்பது நாகரீகத்தின் நிபந்தனையா?!

கணரக வாகனங்கள், வான ஊர்ர்திகள், யுத்த உபகரணங்கள், பாரிய தொழிற்சாலைகள், பல்வகை மின்சார உபகரணங்கள் போன்றவற்றை உற்பத்தி செய்ய முடியாமைக்கு ஹிஜாப் தான் காரணமா? !

- பல அரபு, இஸ்லாமிய நாடுகளில் பெண்கள் தமது ஹிஜாபைக் களைந்து முதுகுக்குப் பின்னால் போட்டு தமது பாதங்களால் மிதித்து விட்டு ஆணுடன் பணிபுரிய வெளிக் கிழம்பி பல வேலைத் தளங்களில் இரண்டறக் கலந்து விட்டனர்.

பெண்கள் ஹிஜாபைக் களைந்து விட்டதனால் இந்நாடுகள் முன்னேற்றமடைந்து விட்டதா?!

ஆண் பெண் கலப்பின் மூலம் நாகரீகத்தோடு செல்ல முடிந்ததா?!

முன்னேற்றமடைந்த நாடுகள் அடைந்துள்ள எழுச்சியையும், பலத்தையும் இந்நாடுகள் அடைந்து விட்டதா?! ஐக்கிய நாட்டு சபையில் (வீடோ) அதிகாரத்தைப் பெற்றுள்ள வல்லரசுகளில் ஒன்றாக இவைகள் மாறி விட்டதா?! பொருளாதார, கல்வி, சமூகவியல், பண்பாட்டுப் பிரச்சினைகளிலிருந்து இந்நாடுகள் விடுதலை பெற்று விட்டனவா?!

◆ இதற்கான பதில் தெளிவானது. விவரிக்க வேண்டிய தேவையில்லை. நாரீகவாதிகளே! இவற்றைப் புரிந்து கொண்டால் ஏன் நீங்கள் பெண்கள் தமது அலங்காரத்தை வெளிப்படுத்தி ஆண் பெண் கலப்பிற்கு அழைப்பு விடுக்கிறீர்கள்?

## பெண்கள் தமது அங்க அழகுகளை வெளிப்படுத்தாமல் கல்வி போன்ற பணிகளை அவர்களுக்கு மத்தியில் மேற்கொள்ளலாம்.

இந்த நாட்டிலே (சவூதி அரேபியாவிலே) பெண்கள் கல்வியின் உச்ச நிலையை அடைந்து உயர் கல்விச் சான்றிதல்களையும் பெற்றுள்ளனர். வைத்தியம், ஆசிரியை, அதிபர், பல்கலைக்கழக விரிவுரையாளர், சமூகவியல் ஆராய்ச்சியாளர், கண்காணிப்பாளர் போன்ற அவர்களுக்குப் பொருத்தமான பல துறைகளில் பணியாற்றுகின்றனர். அவர்கள் அனைவரும், அவர்களல்லாதவர்களும் சமூக எழுச்சியிலே, எதிர்கால சந்ததிகளை கட்டியெழுப்புவதிலே தமது பங்களிப்பை செலுத்துகின்றனர். அவர்களின் ஹிஜாப், நாணம், பத்தினித் தன்மை எதுவும் அவர்களுக்குத் தடையாக இருக்கவில்லை.

◆ இந்த நாட்டிலே பெண்கள் தமது அலங்காரத்தை வெளிப்படுத்தாமல், அண்ணிய ஆண்களோடு கலக்காமல் அதிகமான நாடுகளில் பெண்கள் இழிவுக்கும், இன்னலுக்கும் உட்படுவதைப் போன்று உள்ளாகாமல் தமக்கும்,

தமது குடும்பத்துக்கும், தமது சமுதாயத்திற்கும் சேவை செய்ய முடியுமென்பதை நிரூபித்து விட்டனர்.

♦ இந்த நாட்டிலே பெண்களின் சக்திகள் செயலிழந்துள்ளன. அவர்கள் தமது ஹிஜாபைக் களைந்து காரியாலயங்களிலும், வேலைத் தளங்களிலும் ஆண்களோடு இரண்டறக் கலந்தாலன்றி அவர்களால் சமூகத்துக்குப் பயன் தர முடியாதெனக் கூறுகின்ற, ஆண் பெண் கலப்பிற்கும், பெண்ணின் அலங்காரத்தை வெளிப்படுத்துமாறும் அழைப்பு விடுப்போரின் கூற்று பொய் என்பதை நமது நாட்டு பெண்களின் அனுபவம் நிரூபித்து விட்டது. அல்லாஹ் கூறுகின்றான்: "இவர்கள் வாயிலிருந்து வெளியாகும் வார்த்தையால் இது பெரிதாகி விட்டது. பொய்யையன்றி (வேறெதையும்) அவர்கள் கூறவில்லை." (18:5)

## அவர்கள் எதனை விரும்புகின்றனர்?!

அவர்கள் நாகரீகத்தையோ, முன்னேற்றத்தையோ, எழுச்சியையோ விரும்புவதில்லை. மாற்றமாக பெண்கள் அவர்களுக்கு அண்மையில் அவர்களின் இச்சைகளுக்கு இசைவான மேய்ச்சல் நிலமாக இருக்க விரும்புகின்றனர். அவர்களின் ஆசைகளுக்குப் பொருத்தமான திறந்து விடப்பட்ட போகப்பொருளாகவும், அவர்கள் விரும்பும் போதெல்லாம் அவளோடு வீணான முறையில் நடந்து கொள்ளவும், இழிவுச் சந்தையில் அவளை விற்பனை செய்யவும் விரும்புகின்றனர். நாணம், பத்தினித் தன்மையற்ற பெண்ணை விரும்புகின்றனர்.மேற்கத்திய சிந்தனை, மேற்கத்திய குறிக்கோலுடைய பெண்ணை விரும்புகின்றனர். நடனம், பாடல், சினிமா போன்ற துறைகளை நன்கறிந்த பெண்ணை விரும்புகின்றனர். தனது கோட்பாடு, இறை விசுவாசம், பரிசுத்தம், பண்பாடு, பத்தினித் தன்மை அனைத்தையும் அடியோடு விட்டு விட்ட பெண்ணை விரும்புகின்றனர்.

## ஹிஜாப் அணியுமாறு அழைப்பு விடுப்போரை குற்றம் காண்போருக்கான பதில்.

ஹிஜாபைக் கடைபிடிக்குமாறு கூறுவோரை குற்றம் காண்போர் பற்றி அவர்களின் உண்மை நிலை பற்றி தாராளமாகக் கூறுங்கள். நிச்சயமாக அவர்கள் பொய் கூறுவ

தோடு தாம் கூறுவது பொய் என்பதையும் அவர்கள் அறி கின்றனர். ஹிஜாப் என்ற உயர் பண்பிற்கு அழைப்பு விடுப் போர் பெண்ணை உடல் ரீதியாக மாத்திரம் நோக்குகின் றனர். பெண் தான் விரும்பியதை அணியுமாறு அவளை விட்டு விட்டால் உடல் ரீதியான அந்த சிந்தனை மறைந்து ஆண் பெண்ணுக்கிடையில் சுமூகமான உறவு ஏற்படும் என அவர்கள் கூறுகின்றனர்.

- எவ்வித ஐயமுமற்ற யதார்த்த நிலை அவர்களின் இக்கூற்றைப் பொய்ப்பிக்கிறது.

- பெண் தான் விரும்பிய ஆடையை அணிகின்ற, விரும்பிய வர்களோடு நட்பு வைக்கின்ற சமூகங்களில் நடை பெறும் நிகழ்வுகள் எனது கூற்றுக்கு ஆதாரமாக உள்ளன. இந்த சமூகங்களில் காம உணர்வின் விலை குறைந்து விட்ட தா? ஆண் பெண்ணுக்கிடையில் சுமூகமான உறவு நிலவி யதா?

## பின் வரும் கணிப்பீடுகள் இதற்கு விடை அளிக்கிறது:

1 – ஐக்கிய அமெரிக்காவில் 19 மில்லியன் பெண்கள் கற்பழிப்புச் சம்பவங்களுக்கு இரையாகியுள்ளனர் என அறிக்கை ஒன்று கூறுகிறது.
நூல்: அமெரிக்காவை உண்மையாக அறிந்த நாள்.
2 – மனோ வைத்தியத்துக்கான இத்தாலிய ஒன்றியம் அபிப்பிராய வாக்கெடுப்பொன்றை நடாத்தியது. அதில் 70% வீதமான இத்தாலிய ஆண்கள் தமது மனைவிய ருக்கு துரோகமிழைத்துள்ளதாக ஏற்றுக்கொண்டுள்ள னர். (நூல்: முஸ்லிமின் சிந்தனைகள்)

3 – அமெரிக்காவில் வருடாந்தம் ஒரு மில்லியன் குழந்தை கள் விபச்சாரத்தால் பிறக்கின்றனர். ஒரு மில்லியன் கருக் கள் சிதைக்கப்படுகிறது. (அமலுல் மர்ஆ பில் மீஷான்)

4 – கர்னல் பல்கலைக் கழகம் நடாத்திய வாக்கெடுப்பில் சமூகப் பணியில் வேலை செய்கின்ற 70% பெண்கள் பாலி யல் வல்லுறவுக்கு உற்படுத்தப்பட்டுள்ளனர். அவ்வாறே 56% பெண்கள் ஆபத்தான உடல் ரீதியான எல்லை மீறல்

களுக்கு உற்பட்டுள்ளனர். (அல் மர்ஆ மாதா ப∴தஸ் ஸூகூத்)

5 — ஜெர்மனியில் மாத்திரம் 35000 பெண்கள் வருடாந்தம் கற்பழிக்கப்படுகின்றனர். இது பொலீஸில் பதிவு செய்யப் பட்டுள்ள எண்ணிக்கையை மாத்திரம் பிரதிபலிக்கிறது. பதிவு செய்யப்படாத கற்பழிப்புச் சம்பவங்கள் குற்றப் புலநாய்வு பொலீஸின் கணிப்பீட்டின் பிரகாரம் இதை விட வும் ஐந்து மடங்கு அதிகமாக இருக்கிறது. (ரிஸாலா இலா ஹவ்வா∴)

◆ இந்த எண்கள், கணிப்பீடுகள் அவர்களின் வாதம் பிழையானது என்பதைக் காட்டவில்லையா? அல்லது இந்த எண்ணிக்கைகளும், கணிப்பீடுகளும் அவர்கள் விரும்புகின்ற ஆண் பெண்ணுக்கிடையில் பரிமாறுகின்ற சமூகமான உறவின் ஒரு பகுதியா?!

## பார்வை (விளக்கங்)கள் உடையோரே, படிப்பினை பெறுங்கள்

முஸ்லிம் யுவதியே!:

பெண் தனது நாணத்தையும், பத்தினித் தன்மையையும் பேணிப் பாதுகாப்பதற்கு ஹிஜாப் மிகப் பெரும் துணை யாக இருக்கிறது. ஹிஜாப் தீய பார்வைகளிலிருந்து அவ ளைப் பாதுகாக்கிறது. மறைக்க வேண்டியதை வெளிப் படுத்தி, பண்பாட்டு வீழ்ச்சி போன்ற கசப்பான அனுபவங் களை அனுபவித்து ஆண் பெண் கலப்பு, பாவச் செயல் போன்ற நெருப்பால் தம்மை சுட்டெரித்துக் கொண்டோர் இந்த உண்மையை ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்த விடயத்தில் விரோதிகள் சான்று பகர்ந்தவைகளே உண் மை!! அமெரிக்கப் பெண் பத்திரிகையாளரான (ஹில்ஸி யான் இஸ்தாஸன்பரி) என்பவர் அரபு நாட்டு தலை நகர் ஒன்றில் சில வாரங்களைக் கழித்து விட்டு தனது நாட்டுக் கு திரும்பிய பின் கூறுகின்றார்: நிச்சயமாக அரபு சமூகம் பூரணத்துவமானதும், சாந்தி நிறைந்ததும் ஆகும். இந்த சமூகம் வாலிபர்களுக்கும், யுவதிகளுக்கும் பொருத்த மான வரையறைகளை இடுகின்றதால் அதன் வழிகாட் டல்கள் கடை பிடிப்பதற்குத் தகுதியானதாகும். இந்த சமூகம் அமெரிக்க, ஐரோப்ப சமூகங்களை விடவும் வேறு படுகிறது. பெற்றோர்களுக்கு சங்கை செய்வதையும்,

பெண்களுக்கு வரையறைகளை இடுவதையும் அவசியப்ப டுத்துகின்ற பண்பாடுகள் உங்களிடம் உள்ளது. அமெரிக் காவிலும், ஐரோப்பாவிலும் இன்று குடும்பங்களை சின்னா பின்னமாக்கியுள்ள அனைத்தையும் ஆகுமாக்குகின்ற நடைமுறையை இஸ்லாம் தடை செய்கிறது. எனவே ஆண் பெண் கலப்பை தடை செய்யுங்கள். கட்டுக்கடங் காத யுவதிகளின் சுதந்திரத்திற்கு வரையறை இடுங்கள். ஹிஜாபின் பக்கம் திரும்புங்கள். அமெரிக்க, ஐரோப்ப பைத்திகாரத்தனத்தை விடவும், அனைத்தையும் ஆகுமா குகின்ற மோசமான நிலையை விடவும் இது உங்களுக்கு மேலானது. (நூல்: ரிஸாலதுல் மர்ஆ வகைதுல் அ.:தா.:)

## முஸ்லிம் யுவதியே!

இது ஓர் அமெரிக்கப் பெண். அமெரிக்க சமூகத்தை அழித்து விட்ட பண்பாட்டு வீழ்ச்சி, குடும்பப் பிளவுகளை பார்த்த பின் ஹிஜாபின் பக்கம் அழைப்பு விடுக்கிறார்.

அமெரிக்கப் பெண் எமது அழகான பழக்க வழக்கங்க ளையும், ஒழுக்க மாண்புகளையும் கடை பிடிக்குமாறு எமக் கு உபதேசிக்கிறார்.

அமெரிக்க, ஐரோப்ப சமூகங்களை சீர் கேட்டுக்கு இட்டுச் சென்ற – அனைத்தையும் ஆகுமாகக் கருதல், ஆண் பெண் கலப்பு ஆகியவற்றின் மோசமான முடிவை விட்டும் எம்மை எச்சரிக்கை செய்கிறார்.

- ♦ முஸ்லிம் யுவதியே! நன்மாராயம் பெற்றுக் கொள்வாயாக.. உன் ஹிஜாபின் மூலம் உன் கண் ணுக்கு குளிர்ச்சியைக் கொடுப்பாயாக .. காபிர்கள் வெறுத்த போதும் இறுதி வெற்றி இறையச்சம் உடை யோருக்கும், எதிர் காலம் இஸ்லாத்திற்கும் உரியது என்பதை அறிந்து கொள்.

எமது நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத்தும், ஸலாமும் கூறுவா னாக!.

# من أهداف المكتب

١- تعريف غير المسلمين بدين الاسلام ودعوتهم اليه، وترغيبهم فيه، مشافهة، ومراسلة، واستماعا.

٢- تصحيح عقائد المسلمين وتنقيتها من الشرك وشوائبه.

٣- نشر العلم الشرعي بين الجاليات المسلمة.

٤- توعية المسلمين وتوجيههم وإرشادهم إلى ما يصلح الحال ويسعد المآل.

٥- الدعوة الى ترك البدع والخرافات الموجودة عند بعض المسلمين.






المملكة العربية السعودية

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بغرب الديرة

تحت إشراف وزارة الشؤون الاسلامية والأوقاف والدعوة والارشاد

ص.ب ١٥٤٤٨٨ - الرياض ١١٧٣٦ - تقاطع شارع الريس مع شارع عسير

هاتف ٤٢٩١٩٤٢ - ناسوخ ٤٢٩١٨٥١

حساب رقم ٩٣٤٠ / ٤ شركة الراجحي المصرفية فرع سلطانة

The Cooperative Office for Call & Guidance to Communities at Western Diraah